





# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - மார்கழி - 2014 - டிசம்பர்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்


**ஜய - மார்கழி - 2014 - டிசம்பர் இதழ் - 30**



சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.


**பொருளடக்கம்**






தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## திருநெல்லை துதி

தேனாரும் கோகனகப் பொன்போல்வாள் திருநெல்லை
தெய்வநறும் புனற்கங்கை திருமுடியில் ஏற்றான்தன்
திருப்புயங்கள் தழுவியவள் திருமுறைக்கு வித்தாகித்
திகழ்கின்ற சமிவனத்தாள் தேடிவரும் அடியவர்க்குத்

தானாக முன்வந்து தன்இருகண் பொழியருளைத்
தந்தவர்க்கு வீடளிக்கும் தருமமிகு வன்னிவனத்
தாயான சங்கரியாள் தாமரைக்கண் மாலுக்குத்
தங்கையெனப் பின்வந்த தளிர்க்கொடியாள் கையிலொரு

மானாட இன்னுமொரு மழுவாடும் கண்ணுதல்முன்
மடங்கண்ட ஆண்டவராம் அருள் முத்து ராமலிங்கர்
மனமிருக்கும் ஆத்தாளை மங்கலப்பெண் பெண்ணமுதை
மாபெரிய துறவியர்கள் மகிழ்ந்துதொழ நிற்பாளைத்

தேனாடும் மலர்க்கொன்றை திகழ்மதியர் கையிலொரு
தீயாடத் திகழ்கொற்ற வாளீசன் திருத்தோள்கள்
தினமணையும் பெருமாட்டி திருநெல்லை பொன்னழகுத்
திருவடிகள் இரண்டனையும் தினம்போற்றி வணங்குவமே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

பக்திமார்க்கத்தில் அவசியம் பயிலவேண்டிய பண்புகளில் முக்கியமான ஒன்று பொறுமை. பொதுவாக எல்லாச் சமயங்களும் வாழ்க்கை நெறிமுறைகளையே போதிக்கின்றன. அந்தச் சமயங்கள் தோன்றி வளர்ந்த தேசம், காலம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு அந்தந்த சூழ்நிலைக்கேற்ப வாழ்க்கை நெறிமுறைகளைப் போதிக்கின்றன.

உணவு, உடை மற்ற கலாச்சாரப் பண்புகள் போன்றவற்றைச் சுற்றுச் சூழல்களே நெறிப்படுத்தக்கூடிய காரணங்களாக அமைகின்றன.

குளிர்மிகுந்த நாட்டிலே நான்கு அடுக்கு உடையும், காலணிகளும் அணிந்து கொள்வது கட்டாயம். அதைப் போலப் புலால் உண்பது, மது அருந்துவது இவையெல்லாம் வெப்ப தட்ப நிலைக்கேற்ப அந்தந்த மதங்கள் ஏற்றுக்கொள்கின்றன. அதைப் போலப் பாலைவனப் பகுதிகளிலே வாழ்கின்ற மக்கள் அதிகமான சூட்டிற்கும், சூறைக்காற்றிலிருந்தும் தங்களைக் காத்துக்கொள்ள உடல் முழுவதையும் மறைக்கக்கூடிய உடைகளை அணிவது அவசியமான ஒன்றாகும். எனவே உணவு, உடை மற்ற கலாச்சாரப் பாகுபாடுகளைப் பிற மதத்தினர் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

எல்லா மதங்களும் அடிப்படையாக மனிதநேயம் அன்பு, கருணை சிரம காலத்தில் அடுத்தவருக்கு உதவுவது, எல்லா மக்களையும் சகோதர, சகோதரிகளாகப் பாவித்து நடத்த வேண்டும் என்பனவற்றை வலியுறுத்துகின்றன. மதங்களின் மூலக் கோட்பாடுகளையும் தத்துவங்களையும் புரிந்து கொள்ளாத மூர்க்கர்கள் தங்கள் மதமே சிறந்தது என்று பிரச்சாரமும் போராட்டமும் நடத்துகிறார்கள்.

எந்த மதத்தை எடுத்துக் கொண்டாலும் வன்முறையோ அடுத்தவரை இழிவுபடுத்துவதோ அடுத்தவர் விருப்பத்திற்கு மாறாக அவர்களைக் கட்டாயப்படுத்துமாறு கூறவில்லை. எம்மதமும் சம்மதமே என் மதம் சிறப்பானது எனக்குப் பிடித்தமானது என்கின்ற அளவிலே மனப்பக்குவத்தைப் பெற வேண்டும். பிற மதங்களைச் சாடுவதோ குறைகூறுவதோ, விரோதத்தைத் தான் ஏற்படுத்துமே ஒழிய குறைசொல்கின்ற மதவாதிக்கு நன்மை ஏற்படாது.

எல்லா மதங்களும் பிற மதத்தினரை அன்போடு நடத்தவும், பகையைப் பாராட்டாமல் இருக்கவும் போதிக்கின்றன. சமயப் பொறை என்பது எல்லோரும் கடைப்பிடிக்க வேண்டிய பண்பு. பொறுமை என்பது மனிதனுக்கு மிக முக்கியமான பண்பாகும். வேதாந்த தத்துவத்தில் பிரம்ம ஜீவ ஐக்கியத்தை அளிக்கக் கூடிய ஆறு பண்புகளில் மிக முக்கியமான பண்பாகச் சகித்தல் கூறப்படுகிறது. யாரும் எல்லோருக்கும் பிடிக்கக்கூடிய காரியங்களை மட்டும் செய்ய இயலாது. பல்வேறு சிறு செயல்களில் வேற்றுமைகள் ஏற்படலாம். இருந்தாலும் பொது நலன் கருதி அந்த வேற்றுமைகளைப் பொறுத்துக் கொள்வது மிக அவசியம்.

உதாரணமாகப் புகை வண்டிப் பயணத்தில் நம் அருகில் உள்ள பயணி அவர் உணவுப் பழக்கத்திற்கு ஏற்பப் புலால் உணவு சாப்பிடலாம். அதனால் ஏற்படும் வாசனை நமக்குப் பிடிக்காமல் இருக்கும். இருந்தும் நாம் பொறுமை காப்பது அவசியம். இல்லை என்றால் தேவையில்லாத கை கலப்பு ஏற்படலாம்.

இந்தப் பொறுமை எல்லாச் சிறிய, பெரிய விஷயங்களிலும் கடைப்பிடிப்பது அவசியம். இந்தப் பொறுமை இல்லாவிட்டால் தன் மதத்தில் உள்ளவர்களே சமய நெறிகளைக் கடைப்பிடிக்காத காலத்திலே தேவையில்லாத போராட்டங்களை நிகழ்த்த வேண்டி வரும். தவறு செய்பவர்களைப் பொறுமை காத்து முடிந்தவரை சாந்தமாகப் போதித்துத் திருத்த வேண்டும்.

சமய நெறிமுறைகளைத் தவறாகப் புரிந்து கொள்பவர்கள் வன்முறையாளர்களாக மாறுவதை உலகம் எங்கும் காண்கிறோம். சமய நெறிமுறைகளைச் சரியாகப் புரிந்து கொள்வதும் மற்றவர்பால் நேய உணர்வோடு பழகுவதும் பாகுபாடுகளைப் பொறுத்துக் கொள்வதும் மிக அவசியம். இல்லை என்றால் சமீபத்தில் பாகிஸ்தான் பெஷாவர் பகுதியில் 132 பச்சிளங் குழந்தைகளைக் கொன்ற மகா மூர்க்கர்களைப் போன்று மக்களின் பெரும் பகுதி மாறக்கூடிய அபாயம் உண்டு.

எனவே சமயப் பொறுமையும் வாழ்விலே பொதுவான மனித நேயமும் சகிப்புத் தன்மையும் மிக அவசியம். நெறிமுறைகளைக் கடைப்பிடித்து வாழ்ந்து உயர்நிலை அடைவோமாக.

**ஸ்ரீ சற்குருநாதன் துணை**

தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு (தொடர்ச்சி)

### படைப்பயிற்சி - திருமண ஏற்பாடு

14. கொடிநெ ருங்கும் கொடிஞ்சிஅம் தேர்பரி
கடம்ம லிந்த கயம்ஒண் சிவிகைஇப்
படியில்ஊ ரப்ப யிற்றுவித்து ஆசுஇலா
வடிவுஇ லங்கு மகற்கு மணம்செய்வான்.

துகிற் கொடிகள் நிறைந்த மேல் மொட்டுடைய அழகிய தேர் மீதும், குதிரை மீதும், மதம் நிறைந்த யானை மீதும், ஒளி பொருந்திய பல்லக்கின் மீதுமாக ஏறி, அவற்றை இந்தப் பூமியில் நடத்திப் பழக்குவித்து, மாசற்ற அழகுடன் விளங்கும் புதல்வற்குத் திருமணம் செய்ய ஆசைப்பட்டான்.

### மணவோலையும், பன்னாட்டு அரசர் வருகையும்

15. மடங்கல் அன்ன பலம்உள்ள மாமன்னன்
இடங்கொள் எண்ணெழு தேசத்து இறைவர்க்கு
முடங்கல் போக்கினன் கண்டு முடிமன்னர்
தடம்கொள் சேனைகள் சூழ்வரச் சார்ந்தனர்.

ஆண் சிங்கம் போன்ற வலி கொண்ட அக் கருநாட நாட்டு மன்னன், என் புதல்வன் மணங்காண நீங்கள் எல்லாம் வர வேண்டும் என்று, விசாலமான இடங்கொண்ட ஐம்பத்தாறு நாட்டு அரசர்களுக்கும் திருமண ஓலை அனுப்பினான். முடி மன்னர்களும் தம் பெருமை மிக்க படைகள் சூழ்ந்து வர, மாபுரம் என்னும் அப்பதியைச் சேர்ந்தார்கள்.

### நகரத்தை அலங்கரித்தல்

16. வடிகொள்வெண் சுதையால் பித்திகை தீற்றி
வான்உற மணிக்கொடி நிரைத்துக்
கடிநறும் சாந்தம் குங்குமம் தன்னால்
கமழ்தர மறுகுஎலாம் மெழுகிப்

பொடிகொள்சிந் துரத்தால் கோலமே புனைந்து
பூமலர் பொரிநனி சிதறிக்
கொடிகொள்முது எயில்மேல் மாடம்ஒண் சிகரி
கோதுஅறப் புதுக்கியே குலவ.

வடிகட்டி எடுத்த வெண் சுண்ணாம்பினால் வீடுகளின் சுவர்களைத் தீற்றி மெழுகி, வான் அளாவும்படி அழகிய ஓவியங்கள் நிறைந்த பட்டுத் துகிற் கொடிகளை வரிசையாக நாட்டி, நறுமணச் சந்தனத்தினாலும், குங்குமத்தாலும் மணம் வீசும்படி வீதிகளை எல்லாம் மெழுகிட்டு, சிந்துர வண்ணப் பொடியால் கோலமிட்டு, அழகிய மலர்களையும், பொரிகளையும், மிகுதியாக இறைத்து, கொடி கொண்ட மதில்களையும் மேல் மாடங்களையும், ஒளி கொண்ட கோபுரங்களையும் நன்கு விளங்கப் புதுப்பித்தனர்.

17. கதலியும் கமுகும் நட்டுக் காவணம் அலங்க ரித்துப்
புதியதோ ரணங்கள் கட்டிப் பொற்குடம் செறித்துத் தீபம்
இதம்உற எங்கும் வைத்தே இந்திர நகரம் போல
மதுமலர்த் தாமம் நாற்றி மாபுரி அலங்க ரித்தார்.

வீதிகளின் இருபக்கத்திலும் வாழை மரங்களையும், பாக்கு மரங்களையும் ஊன்றி, பந்தல்களை அலங்காரம் செய்து, புதிதாகத் தோரணங்களை நாட்டி, பொன்னால் ஆகிய நிறை குடங்களை வைத்து விளக்குகளை எங்கும் ஏற்றி வைத்து, தேன் பொருந்திய மலர் மாலைகளைத் தொங்க விட்டு, அந்த மாபுரி என்னும் நகரை, இந்திரன் நகரமாகிய அமராவதியைப் போல அலங்கரித்தனர்.

### பெண்ணின் சிறப்பும், திருமண நிறைவும்

18. வில்இ லங்குகை வேந்தர் மரபினில்
நல்ல சாமுத் திரிகநூல் நன்கதாச்
சொல்இ லக்கணத் தோடு துரிசுஇலா
முல்லை மாலை முருகு விரியவே.

வில் தாங்கி ஒளிவிடும் கை கொண்ட அரசர் மரபினில் உயர்ந்த உடல் இலக்கணம் கூறும் சாமுத்திரிகா நூலின்படி நல்ல அழகுடைய இளவரசி வந்த போது அவள் அணிந்திருந்த முல்லை மாலையின் மணமானது பரவியது.

19. மூவுலகு அதனில் உள்ள
முகிழ்முலை கருங்கண் செவ்வாய்ப்
பாவையர் எழிலில் போதன்
பகுத்துஎடுத்து உயிரோடு ஏய
ஓவியம் தீட்டி னான்என்று
உலகினில் உரைக்கச் செய்ய
பூஉறை திருவி ரும்பும்
பொற்புடன் அவத ரித்தே.

அரசிளங்குமாரியை நான்முகன் மூவுலகங்களிலும் உள்ள சிறந்த பெண்களிடமிருந்து அந்த அழகெல்லாம் ஒன்று திரட்டி அமைத்தாரோ என்று வியக்கும்படிப் படைத்திருந்தான். அரும்பு போன்ற தனங்களையும் சிவந்த வாயையும் உடைய அரசகுமாரியைக் கண்டு செந்தாமரையில் உறையும் இலக்குமியும் வியந்தாள்.

20. இலங்கிய ஆல்ஒண் தளிர்குழைத்து இனிய
இருதனம் கோங்குஇணை அரும்பி
நலம்கிளர் ஆம்பல் குமிழ்இரு குவளை
நண்ணுசெம் சரோருகம் பூத்துத்
துலங்கிய புயலைச் சுமந்துஇரு தாளால்
தோம்இலா மின்என நுடங்கிப்
பலம்தரப் படரும் கொடியினை வேதப்
பண்பினின் மன்றல்செய் வித்தே.

ஒளிபெற்று விளங்கும் ஆலின் தளிரே வயிறாகவும், கோங்கின் அரும்புகளே இருதனங்கள் ஆகவும், அழகான செவ்வல்லி மலரே இதழ் ஆகவும், குமிழம் பூவே மூக்காகவும், இரு கருங்குவளை மலர்களே கண்களாகவும், பூத்த தாமரை மலரே முகமாகவும், மேகமே

கூந்தல் ஆகவும், மின்னலே இடையாகவும், பூங்கொடியைப்போல அசைந்துவரும் இளவரசியை, மறையின் முறைப்படி மகாராசனுக்கு மணம் செய்வித்தனர்.

21. அருந்ததி கணவன் முதல்முனி வரர்கள்
அருமறைக் கிழவர்கள் தம்மால்
பொருந்திய கங்கைப் பூம்புனல் ஆட்டிப்
பொன்நவ மணிகளால் குயின்ற
விரிந்திடு மடங்கல் மெல்தவிசு ஏற்றி
மிளிர்நவ மணிமுடி கவித்துப்
பருந்துஅடர் வேலான் பௌவம்ஆர் புவியைப்
பரிஎனத் தோன்றல்பால் அளித்தான்.

பருந்துகள் நெருங்கிச் சூழும் வேற்படை கொண்ட கருநாட வேந்தன், தன் மகனுக்கு, வடமீனாகிய அருந்ததியின் கணவன் ஆன வசிட்டன் முதலாக, முனிவர்களாலும் வேதம் ஓதும் அந்தணர்களாலும், புனித கங்கையால் நீராட்டி, பொன்னாலும், நவரத்தினங்களாலும் செய்யப் பட்ட அகன்ற சிம்மாசனத்தில் ஏற்றுவித்து, நவமணிகளால் செய்யப் பெற்ற முடியை அவன் தலையில் கவித்து, கடல் சூழ்ந்த இவ்வுலகை நீ தாங்குக என்று மகாராசனிடம் தந்தான்.

22. சோகமே இன்றி இருந்தனன் வேந்தன்
தோன்றலும் பார்பொது நீக்கி
ஏகமாய்ச் செங்கோல் எங்கனும் செல்ல
எண்திசை விசயமும் செய்தே
மாகநாடு என்னப் போகமே துய்த்து
மடந்தையோடு இருந்தனன் என்றான்
வாகைவே லவன்பின்என் செய்தான் என்ன
மறையவர்க்கு உயர்முனி வகுக்கும்.

இவ்வாறு கருநாட வேந்தன் தன் ஆட்சியைப் புதல்வனிடம் அளித்த பின் வருத்தம் இன்றி இருந்தான். பெருமையில் சிறந்த அவன் புதல்வனும், இவ்வுலகம் அனைவருக்கும் பொதுவானது என்ற

கருத்தை அழித்து, தனக்கு மட்டுமே உரிமையாகச் செய்து, தன் செங்கோல் ஆட்சி எங்கணும் நடக்க எட்டுத் திசைகளிலும் சென்று வெற்றி பெற்றான். இது விண்ணவர் நாடு என்று சொல்லும் படியாக வளமாக்கினான். வெற்றிப் பெருமிதத்துடன் தன் மனைவியுடன் இன்பமாய் வாழ்ந்து இருந்தான், என்று சூதமுனிவர் கூறினார். உடனே நைமிசாரணியத்து முனிவர்கள் சூதமுனியை நோக்கி, அதன்பின் வேற்படை உடைய அந்தக் கருநாட வேந்தன் என்ன செய்தான்? என்று வினவ, சூதமுனியும் வேதம் கற்ற அந்த முனிவர்களை நோக்கி, மேல் நடந்தவற்றை வகைப்படுத்திக் கூறத் தொடங்கினார்.

## மகாராசனும், அவன் மனைவியும்
## தத்துவ ஞான விசாரணை செய்தல்

23. மனைவியும் தானும் ஒர்நினைவு ஆகி
மாறுபாடு இன்றிஓர் காலும்
தனைஉணர் யோகி தந்தைதாய் கடவுள்
தங்களை அனுதினம் இறைஞ்சி
அனையவர் உரைத்த நெறிதனில் நடந்தும்
அருத்தங்கள் மனத்தினில் தரித்தும்
வினைய மதுடனே நூல்முறை அவரை
வினவியும் சிலபகல் போக்கி.

அப்படி வாழ்ந்து வரும் போது அந்த மகாராசனும் அவன் மனைவியும் எப்போதும் மாறுபாடு இல்லாமல் ஒரே சிந்தனையுடன் தன்னை அறிந்த யோகியர், தந்தை தாய், கடவுள் ஆகியவர்களைத் தினந்தோறும் வணங்கி வந்தனர். அவர்கள் கூறிய நல்வழியில் நடந்தும், உறுதிப் பொருள்களை உள்ளத்தில் சிந்தித்துப் பதிய வைத்தும், அடக்கத்துடன் ஞான நூல்களை முறைப்படி யோகியர்பால் பயின்றும் கேட்டும் சில நாள் கழித்தனர்.

24. தனியிடம் அதனில் இருந்துஇரு வர்களும்
தங்களில் தாம்உணர்ந்து உசாவித்

துனிசெய்மா மாலயப் பிறப்புஅது நீங்கிச்
சுகமதை அடைந்துஅனு தினமும்
இனிமை யதாக இருக்கலாம் ஞானத்து
என்றுஎணி ஞானிகள் சார்ந்து
நனியவர் பாத பூசனை புரிந்து
நாள்தொறும் வினவினர் நன்றாய்.

அவ்விருவரும் தனியான இடத்தில் இருந்து ஞானத்தை அடைய உதவும் தத்துவங்களை ஆராய்ந்தனர். அதன்பின் தமக்குள் ஒருவரை ஒருவர் கேட்டு அறிந்து, அந்தத் தத்துவ ஞானத்தினால்தான் துயர் தரும் பெரிய மாயையின் காரணமான பிறவிப்பிணி நீங்கப் பெற்று, சுகமடைந்து எப்போதும் இன்பமாக இருக்கலாம் என்று எண்ணி, ஞானிகளை அடைந்து, அவர் திருவடி வழிபாட்டினைத் தினந்தோறும் செய்து அவர்களிடம் பிறவியைப்போக்க வழிகேட்டனர்.

## குருவின் அருளின்றித் தத்துவ ஞானம் உண்டாகாது என்று மகாராசன் துணிதல்

25. இருவரில் அரசன் தனக்குஅறிவு ஓங்க
இருவகைச் சார்வையும் அகற்றிக்
கருஉடல் காவல் தனையும்கை விடுத்துக்
கருத்துஅசை யாதுமெய் உணர்வை
மருவிடில் அகப்பற்று அற்றுமேல் வீடு
வாய்த்திடும் அதற்குமெய்ஞ் ஞானம்
குருஅருள் இன்றி விளங்கிடாது எனவே
கொண்டனன் மனத்தினில் துணிவே.

அவ்விருவரில் மகாராசன் நிலை இல்லாததும் நிலையானதும் ஆன பொருள்களைப் பகுத்தறியும் உணர்வு மேம்பட, உலகையும் அதன்கண் உண்டாகும் இன்பங்களையும் என்னுடையன என்று கருதும் இருவகைப் பற்றுகளையும் அகற்றிவிட்டான். கருவிலே தோன்றும் இவ்வுடம்பைக் காப்பதைக் கை விட்டு அறிவு கலங்காமல் தத்துவ ஞானத்தை அடைய வேண்டும். அப்படி அடைந்தால் உடம்பு

பொறி, முதலான அந்தக் கரணங்களை யான் என்று நினைக்கின்ற அகப்பற்று நீங்கி மேலான வீட்டுலகம் கிடைக்கும். அதற்குக் காரணமாகிய தத்துவ ஞானமானது குருவருள் இன்றிக் கிடைக்காது என்று மனத்தில் துணிவு கொண்டான்.

26. மனைதனில் ஆசை பொருந்தியே நின்று
மகிதனில் ஞானியாம் எனவே
தனைமிக மதிப்போன் தன்னைவந்து ஒருவன்
தந்திடு ஞானம்என்று இரந்து
வினவல்மட் டையினைப் பருகுவோன் தன்னை
வேண்டித் தென்னம்பழந் தனையே
இனம்பணித் திரிவோன் புத்திபோலும் எனவே
இயம்புவர் முற்றுணர் பெரியோர்.

உலக வாழ்க்கையில் உழன்று கொண்டே தன்னை ஞானி என்று நினைத்துக்கொண்டிருப்பவனிடம் சாதகன் ஞானோபதேசம் பெற விரும்புவது தென்னை மட்டையின் சாறு பிழிந்து குடிப்பவனிடம் தேங்காயைப் பெற ஆசைப்படுவது போலாகும் என்று ஞானிகள் கூறுவர்.

27. வேத ஆகம சாத்திர புராணங்கள்
விளங்கவே கற்றுஉணர்ந்து அவற்றைத்
தீதுஅற எவர்க்கும் தெளிவுற ஓதிச்
செப்பிய அந்நெறி அதனில்
சாதகம் இலாத குருவினை ஒருவன்
தான்அடைந்து ஆனந்தம் வினவல்
ஏதம்ஆம் கழுதை தன்னைக்குங் குமத்தின்
இயல்புகேட் டிடுதல்போலும் என்றே.

வேதங்களையும் ஆகமங்களையும் சாத்திர புராணங் -களையும் நன்கு கற்று, பிறருக்குக் குற்றம் இன்றி எடுத்துச் சொல்லும் கல்வியறிவு உடையவன், அந்த நெறியில் தான் ஒழுக வில்லையானால் அவனிடம் போய் உபதேசம் கேட்பது குங்குமப் பொதியைச் சுமக்கும் அறிவற்ற கழுதையிடம் குங்குமத்தின் தன்மையைக் கேட்பதுபோல் ஆகும்.

28. சிவர்கள் இடத்தில் அருள்சிவ பத்தி
திருந்திய துறவுமெய்ஞ் ஞானம்
ஆவதுஓர் வடிவாம் வேதமா முனியை
அமலஆ ரணியத்தில் அடைந்தே
தேவர்கள் தேவே துன்பம்ஓர் காலும்
சென்றிடா முத்திதான் எய்திச்
சாவதும் பிறப்பு நீங்கும்ஓர் நெறியைச்
சாற்றுஎனத் தாழ்ந்திட முனிவன்.

உயிர்கள்பால் இரக்கம், இறைபக்தி, உலகப் பற்று நீங்கிய ஒழுக்கமான திருந்திய துறவு, மெய்ஞ்ஞானம் ஆகியவற்றின் வடிவமாகி வேதம் ஒதி உணர்ந்த முனிவரைத் தூயதான ஒரு காட்டில் கண்டு, தேவர்களால் போற்றப்படும் முனிவரே! ஒரு காலத்திலும் துயரம் அற்ற வீடு பேற்றை அடைந்து பிறப்பு இறப்பு இல்லாத ஒரு வழியை நான் அடையுமாறு எனக்கு உபதேசித்து அருள்வீர் என்று வணங்கினான்.

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/03/06 : கற்கடி – (சூசி) கதை

(முற்குறிப்பு: இதற்கு முந்தைய கதைகளில் மாயை மற்றும் நம் வாசனை பற்றிக் கூறப்பட்டது. தற்போது, பிரம்மம் பற்றிய கோட்பாடுகள் கூறப்படுகின்றன. "என் உடல் அழியக் கூடியது. ஆதலால், அது எப்போதுமே உள்ள (நித்ய) உண்மை அல்ல. ஆனால் பிரம்மம், அழிவுறாதது," எனப் புரிந்து கொண்ட பின்னரும், நாம் இவ்வுடலுடன் உலகியலில் (வியவகாரிகம்) ஈடுபட்டு வாழ வேண்டியுள்ளது. வாழ்வதற்கு உணவுத்தேவை இன்றியமையாத ஒன்றாகிறது. இந்நிலையில் நாம் எத்தகைய இடர்ப்பாடுகளை எதிர்கொள்வோம் எனவும், அவற்றை விட்டு எவ்வாறு முன்னேறலாமெனவும் உணர்த்துவதற்காக, உணவுத் தேவையை முன்னிருத்தி, இக்கதை கூறப்படுகிறது.)

**கதைப்பகுதி :** இமயமலையின் வடபகுதியில் கற்கடி எனும் பெயருடைய ஓர் அரக்கி இருந்தாள். அவள் மலையை ஒத்த பெரிய உடலினள். அவளது சிரிப்பு, இடிக்கு இணையானதாகும். அவளது பிறப்பிற்கென விதிக்கப்பட்ட உணவு, மனிதர்களை உண்ணுதலாகும். பலரையும் உண்டு தீர்த்த அவளுக்கு ஒரு முறை உணவு கிடைப்பது அரிதாகிப் போயிற்று. பசியால் மிகவும் வருந்திய அப்போது, அவள் தன் வயிறு நிறையாமை பற்றிச் சிந்தித்தாள். சம்புத்தீவில் (நமது நாடு) காணும் உயிர்களை எல்லாம் கவர இயலுமாயின் தன் பசி தீர்ந்து உயிர் தங்கும் எனவும், அதற்கு

**"சீவஊசிவடி வானாற்சகத் தோர்உடலங் களில்புகுந்து**
**மேவும்இரைகள் வேண்டியது விழுங்கலாம் (என்று உணர்வாளை)"**

எனவும் நினைத்துத் தாமரைக் கடவுளை (பிரம்மன்) நோக்கித் தவமிருந்தாள்.

**"திருந்துக மலத்தயன் வந்தான்தீயோர் எனினும் அருந்தவத்தால்**
**பொருந்துறாத பொருளுண்டோ..... "**

இவ்வாறு தோன்றிய நான்முகனிடம் தன் விருப்பத்தைக் கூறினாள். அவர், "துர்ச்சேட்டையர், மூர்க்கர், கொடியோர், கொடிதலத்துறைவோர், கதிப்பால் விரும்பா உணவுண்போர்...."போன்ற தீயோரை மட்டுமே உணவாக்கலாமெனவும், மேலும்,

**"நல்லாரிடத் தில்நீஎய்தில் நாமேவிதித்த மந்திரத்தால்**
**கொல்லாது ஒழிவாய்...."**

எனவும் கூறிச் சென்றார். கற்கடியும், அதன் பின்னர், ஊசி வடிவினளானாள். நல்லோரை விட்டு விலகியும், தீயோர் உடம்பினுள் ஊசியாகப் புகுந்தும் பசியாறினாள்.

இவ்வாறு பல ஆண்டுகள் கழிந்த பின்னர், கற்கடி தனது வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கலானாள். ஆசை காரணமாக ஊசி வடிவம் பெற்றோமே, அதனால் உடல் தேய்ந்து சிறிதாகிப் போனோமே எனத் திகைத்தாள். கொல்லும் தொழிலை விட்டுவிட விரும்பினாள். மறுபடியும் தவம் செய்தாள். அவள், பாவம் அகன்று, மனந் தெளிந்து, பரபாவனை மேவி, இவ்வுலகத்தை இகழ்ந்து, ஆனால் விருப்பு

வெறுப்பிலளாய் மன்னுணர்வுற்றாள். அவள் தற்பர உணர்வு நிலை (அபரோட்ச ஞானம்) பெற்றமையை அறிந்து கொண்ட நான்முகன், தாமே அவள்முன் தோன்றினார்.

**“சீவனின் முக்தி அடைந்தனை சிந்தை தெளிந்தனை தொல்வடிவாய்ப்**
**பூவலயத்து அறி வில்லவர் தீயவர் பூரியர்மெய் இரையாய்**
**ஆவிவளர்த்து உரைகென்று அயன்ஏகலும் அத்துவிதப் பரமே**
**பாவனையுற்று ஒருசெய் தொழிலற்ற பதத்தில் இருந்தனளால்.”**

கற்கடி தனது பழைய உடலைப் பெற்று, சமாதி நிலை மேவினாள்.

**“விகற்பம் இறந்த சமாதிநெடும் பகல்மேவினள் மீளவிடா**
**உகப்பொடு நெஞ்சொடுகூடினள் தொல்பசி உன்னினள்**
**நானெனுமாறு**
**இகத்துளமட்டும் உடற்குளதான இயற்கை விடாததனால்**
**சகத்தில் அரக்கர் குலத்தொழிலான தசைப்பலி கொள்வன்எனா”**

பசியை வெல்ல இயலாத கற்கடி, நல்ல வளமுடைய ஓர் வேடுவர் நாட்டை அடைந்து, அதனை ஒட்டிய காட்டில் காத்திருந்தாள். அப்போது, அங்கு வேட்டைக்கு வந்த அந்நாட்டு அரசரையும், அமைச்சரையும் கண்டாள். பசிதாங்காவிடினும், வந்துள்ளோர் தீயவர்களா நல்லவர்களா என உறுதி செய்து கொள்ள விரும்பினாள். அவர்களிடம்,

**“ஈட்டமுறு புழுப்போல் வீர்எனக்கிரையாய் இக்கணத்தே**
**இறக்கவந்தீர்**
**சேட்டமுளார் போலிருந்தீர் தீயவர்போன்றீர் எவர்நீர்**
**செப்புமென”**

கேட்டாள். பேரிரிரைச்சலோடு கூடிய அவள் பேச்சைக் கேட்டும், சிறிதும் அச்சமுறாத மன்னவன்,

**“எய்தாறின் றுளபயனுக்(கு) இயற்றாதார் இல்லையாம்**
**என்றபோதும்**
**நொய்தான கருமத்தில் நொய்தானோர் விரைந்திடுவர்**
**நொய்மைதோன்ற”**

(நொய்தான = அற்பமான)

என, கற்கடியிடம் பொறுமையோடு கூறி, மேலும் **“உனக்கு ஏதும்**

**வேண்டுமாகில் கேட்டுப் பெறுக"** எனவும் கூறினார்.

தன்னுடன் பேசுபவர்கள் தீயோரல்ல எனக் கற்கடி உணர்ந்தாள். ஆனால் அவளது பசி அடங்கவில்லை. ஆதலால்,

**"சிங்கமெனும் உங்களையான் செப்புகின்ற வினாக்கூட்டில்**
**சிறைசெய்கின்றேன்**
**உங்கள் மதியால் திறத்தால் உயிர்வாழ்வீரென வகுத்து**
**உரைசெய்கெனா"**

என மறுபடியும் கேட்டாள். அவளது கேள்விகள் தொடங்கலாமென மன்னர் கூறினார். அவள்கேட்ட கேள்விகளுக்கு அமைச்சர் மிகச்சரியாக விடையளித்தார். (இது தத்துவப் பகுதி) இதனால் மனம் நிறைந்த கற்கடி, பசியை மறந்தாள். மன்னர், கற்கடிக்கு பிரம்ம உபதேசம் செய்தார். மகிழ்வுற்ற கற்கடி, இனிமேல் பிற உயிர் உண்ணாது, சமாதி நிலையிலேயே இருந்து பசியை வெல்வேன் என்றாள். மன்னர் இதனை ஒப்பாது,

**"உடல்போ மட்டும் கருதுமுடல் வாதனைகள் கழலாகண்டாய்"**
எனக்கூறி அவளுக்கு வேறொரு வழி கூறினார். அதனை ஒப்பிய கற்கடி, அரசரோடு அரண்மனைக்குச் சென்று,

**"பூமகள் போல்அங் கிருந்தவடிவைக் கங்குற்போதில் ஒழித்து**
**அரக்கர் குலப்பூவையாகி**
**பாமரராம் பாதகரைத் தோள்மேற்கொண்டு பார்த்திபனோ**
**டமைச்சனுக்கும் பண்புகூறி**
**ஏமமுறும் இமகிரியிற் சமாதிமேவ ஏகினாளின்றளவும்**
**இந்தவாறே**
**கோமகனும் அரக்கியும்நட் பானாரென்று குரிசிலுக்கு வசிட்டமுனி**
**கூறினானால்"**

என இக்கதை முடிகிறது.

**தத்துவப்பகுதி :** கற்கடியின் வினாக்களுக்கு அமைச்சர் கூறிய விளக்கமும், பின்னர் அரசர், கற்கடிக்கு அருளிய பிரம்ம உபதேசமும், இக்கதைக்குத் தத்துவப் பகுதியாகும். கற்கடியால் கேட்கப்பட்ட ஒன்பது கேள்விகளுக்கும் விடை ஒன்றே. அதுவே பிரம்மம். "மாசிலாப்

பரம்பொருளை வகுத்துச் சொன்னாய்" எனத் தொடங்கிய அமைச்சர், பிரம்ம வரையறை (லட்சணம்) கூறுவதாக இப்பகுதி அமைந்துள்ளது.

**வினாக்களும் மறுமொழியும்:**

1. எந்த ஓர் அணுவினுள், மிகப்பெரிய பிரபஞ்சம் தோன்றி, வளர்ந்து, ஒடுங்குகிறது?

அது பரம்பொருளெனப்படும். இந்திரியங்களால் அறியப்படாமையாலும், நுண்ணுணர்வு வடிவாதலாலும் அது அணு எனப்படும். பிரபஞ்சமானது அதிலேயே தோன்றி வளர்ந்து ஒடுங்குவதால் அது பெரிதினும் பெரிதுமாகும்.

2. விண்ணாகவும் விண்ணற்றதாகவும் உள்ளது எது?

மிக விரிந்த வெளியாகவும், அதற்கப்பால் வேறெதுவுமே இல்லை எனும் எல்லை ஆதலால் அது விண் ஆகும். ஆனால் அது நம்மால் காணப்படும் விண் (நீலவானம்) அல்ல. அதுவே பரம்பொருள்.

3. எது சிறிதும் இல்லாததாயும், ஒரு சிறிது உள்ளதாயும் இருக்கிறது?

இத்தகையது என, திடமாக வரையறுத்துக் கூற முடியாமையால் அதனை இல்லை என்பார்கள். ஆனால் அறிவு வடிவ, ஆதார, உணர்வுமயமானதால், அது உள்ளது. அதுவே பிரம்மம்.

4. எது போகாமலே போகிறது? நிற்காமலே நிற்கிறது?

எங்கும் நிறைந்துள்ள அது எங்கேயும் போகாமலே அங்கு போனதாகவும் ஆகும். ஆனால் நடக்கவே இடமின்றி எங்கும் பரந்து (வியாபகமாகி) விட்டதால், அது நிற்காது நிற்கிறது. அதுவே பரம்பொருள்.

5. உணர்வுடையதாயினும் எது கல்போன்றது?

ஒளிர்வாயும், அதற்குவேறாக ஏதுமற்றதாலும் அது உணர்வுடைய சேதனம். ஆனால் முழுதுமாய் அறிய முடியாத திடமாதலால் அதுவே கல் போன்றதுமாகும். அதுவே பரம்பொருள்.

6. வானத்தில் சித்திரம் வரைவது எது?

ஆத்மா எனும் பரம்பொருள், அதற்குட்பட்ட வளிவெளியில், பல உலகங்களை வெளிப்படச்செய்தல் எனும் சித்திரம் செய்கிறது.

7. விதையினுள் மரம் அடங்கியது போல, பலவாறாகக் காணப்படும் இயற்கை (பிரபஞ்சம்) எதனுள் அடங்கும்?

பிரபஞ்சமானது, அணுவான பிரம்மத்தினுள் இருப்பும், பிரம்மத்தின் ஆற்றல் வெளிப்பாட்டில் (பரப்பிரம்மம்) வளர்ச்சியும், அணுப்பிரம்மத்தில் (சுத்தப் பிரம்மம்) ஒடுக்கமும் அடையும்.

8. கடல், அலை, நுரை என்பன பிரிந்து வேறாகாமை போல, எதனினின்று எதுவுமே பிரியாது?

ஆன்மா எனும் பிரம்மத்திற்கு அயலாக எதுவுமே இல்லாததால், பிரிதல் என எதுவுமே இல்லை.

9. வேறுபாடான இரட்டைகள் எங்கே வேறுபடுத்த இயலாது ஒருமை பெறும்?

வேறுபட்டுத் தோன்றும் உலக இரட்டைகள் அனைத்தினுக்கும் பொதுவானதான பிரம்ம ஒளிர்வில் (பிரகாசம்) அவை ஒன்றாகப் பொருந்தும்.

இத்தகைய வினா-விடைகளுக்கு முடிவுரையாக, மன்னர் கற்கடிக்குக் கூறிய உபதேசமாவது:

" கருத்ததனால் சங்கற்பவிகற்பமெல்லாம் கைவிடுதல்
கைக்கொள்ளப் படுவதாகும்
திருத்தமுறு தன்விரிவும் குவிவுதானுஞ் சிருட்டியுங் கற்பமுமாகும்
திரள்வேதாந்தத்து
அருத்தமுறு வாக்கியத்தின் நிட்டையாகும்
அவ்வேதவாக்கியத்துக்(கு) அயனுமாகும்
உருத்திகழும் உள்ளதுஇது இரண்டினுக்கும் உள்ளாகும் அவை
இரண்டின் உருவுமாகும்"

எனவும் மேலும்,

"சராசரமாம் உலகனைத்தும் மனரூபத்தால் தான் செய்யும்
விளையாட்டாம் சகமாய் நின்றும்
புராதனமாம் ஒருமையினில் பிரியாதாகும் பூரண
சின்மாத்திரமாம் பொருளே சொன்னாய்"

எனவும் கூறி நிறைவு செய்தார்

பிற்குறிப்பு: 1. மனிதரைப் புசிக்கும் அரக்கரும் கூட ஞானம் பெற்றுச் சீவன் முக்தராகலாமெனவும், சமாதிநிலை கிட்டிய பின்னரும் உடல் இயற்கை, உணவுத் தேவை ஆகியவற்றை மாற்றி விடுதல் எளிதல்ல எனவும், ஆனால் இவைகள் தற்பர உணர்வு பெறத்தடையல்ல எனவும் இக்கதை வலியுறுத்துகிறது. உயிருள்ளபோதே வீடுபேறு(சீவன் முத்தி) கிட்டியவரும் கூட, அதன் பின்னர் உலகியலில் ஈடுபடவேண்டி வரலாம் எனவும் கூறப்பட்டுள்ளது. நம்மிடமும் பிரம்ம ஒளிர்வு உள்ளதால், நாமும் சீவன் முத்தி பெறுதல் இயலும் என்பது தெளிவாக்கப்படுகிறது.

2. நாம் நேரில் காண இயலாவிடினும், பரம்பொருளின் இருப்பு உண்மையே எனக் கூறப்பட்டுள்ளது. இந்த உண்மையைப் புரிந்து கொள்வதற்காகப் பிரம்ம லட்சணம் கூறப்படுகிறது. பெரும்பாலும் கடைப்பிடிக்கப்படும் நேதி, நேதி (அது இல்லை, அது இல்லை) என ஒதுக்கும் எதிரேகவாதம் (எதிர்மறை வாதம்) விடுத்து, இங்கு அன்வய வாத (ஒப்புமை வாத) முறையில் பிரம்ம லட்சணம் கூறப்படுகிறது. இது இக்கதையின் சிறப்பாகும்.

3. 'பிரம்மம், கல்போல அசையாது இருக்கும்' எனவும் (விடை எண் 5), 'பிரம்மம் உலகைத் தோற்றுவிக்கும்' (விடை எண்6) எனவும், இரு எதிர்மறைகள் கூறப்பட்டுள்ளன. இவை ஒரே பிரம்மத்தின் இருவேறு நிலைகள் (சுத்தப்பிரம்மம், பரப்பிரம்மம்) மட்டுமே. இவற்றிற்கு எடுத்துக்காட்டாக, ஒரே மனிதனின் உறக்க நிலை மற்றும் விழிப்பு நிலைகளைக் கூறலாம். ஆதலால் பிரம்மத்திற்கு முரண்பாடு ஏதுமில்லை. இவற்றால் இரண்டு பிரம்மம் என்பது போன்றதுவைதம் கூறப்பட வில்லை.)

(தொடரும்.....)

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

## வீரபாண்டியன் சமிவனம் அடைந்த படலம்

குரவணக் குழல்ஓர் பாகக் கொற்றவாள் ஈசர் காதைச்
சிரவணம் ஒன்ற னாலே செய்தபா வங்கள் தீர்ந்து
கரவணப் படுப வஞ்சக் கலப்பினின்(று) அகன்று முத்தி
உரவணப் படுவர் யாரும் நீயிரும் உவந்து கேண்மின் 1

தழையும்இக் காதைமுன்னம் சைமினி முனிவன் கேட்ப
உழைஅமர் கருங்கண் செவ்வாய் உலோபாமுத் திரைமணாளன்
விழைதரு சிறப்பில் சொற்றான் அவன்விரித்(து) உரைத்த வாறே
குழைதரு மனத்தால் உங்கட்(கு) ஓதுவன் குணக்குன்(று) அன்னீர்.2

துவாபர உகத்தில் நந்தம் சுருதிவித்(து) ஆகி உள்ள
தவாமுனி வரர்க்குள் மேலாம் உத்தம சாந்த யோகி
உவாமதி முகத்தாள் பாகத்(து) ஒருவனார் அருளினாலே
அவாமுதல் அறுத்த வாத ராயண முனிவன் என்பான் 3

உறுகலி உகத்தில் வேதம் ஓதுதற்(கு) உரிய ரான
தெறுகலி மறையோர் ஆதி மூவரும் சில்வாழ் நாள்சிற்(று)
அறிவுடை யவராய்ப் பல்நோயாளராய் உறுதல் ஓர்ந்து
குறிகுணம் கடந்த பெம்மான் குறித்(து)அருள் ஆணை தாங்கி 4

அருமறை அனைத்தும் அத்தி யயனத்துக்(கு) எளிமை ஆகப்
பொருவரும் இருக்கும் என்றும் பொற்(பு)அமை யசுரு என்றும்
வெருவரு சாமம் என்றும் மிளிர்அதர் வணமே என்றும்
ஒரு(வு)அரும் நான்கு கூறா உஞற்றினன் உலகம் உய்ய 5

இருபத்(து)ஓர் சாகையான இருக்குமா மறையை முந்திப்
பருவத்தே சிறந்தோன் ஆய பயிலவற்கு அருளிச் செய்தான்
மருவத்தேம் உதவு நூறு சாகையகருவை மாண்பில்
பொரு(வு)அற்றோன் ஆய வைசம் பாயனற்(கு) அளித்தான் பொற்பின்
6

தழையஆ யிரம்கூ(று) ஆய சாமத்தைச் சைமினிக்கு
விழைதர அருளிச் செய்தான் விரும்பும்ஒன் பானாய் நெஞ்சம்
குழைசெயும் அரவ ணத்தைக் கூறினான் சுமந்து வுக்குப்
பழையஅம் மறையை அந்த நால்வரும் பரப்பி னாரே 7

சாற்றிய நால்வர் உள்ளும் சைமினி முனிவன் என்பான்
ஆற்றரும் வாச பேயம் அக்கினிட் டோமம் ஆதி
ஏற்றம்ஆர் மகங்கள் எல்லாம் இயற்றியும் சித்த சுத்தி
போற்றிடும் அவற்(கு)உண் டாயிற்(று) இல்லைஎன் புகல்வ(து) அம்மா
8

முற்றிய கேள்வி அந்தச் சைமினி முனிஅப் போது
பற்றிய சொரூப நிட்டா பாலன்இந் திரியச் சேட்டை
அற்றவன் முழு(து)உ ணர்ந்தோன் அகத்திய முனிவன் வாழும்
செற்றம்இல் இருக்கை மேவித் திருவடி பணிந்து சொல்வான் 9

செந்தமிழ் மணக்கும் செவ்வாய்ச் செழுந்தமிழ் முனிவர்ஏறே
உந்தரு மறையில் கூறும் கருமம்என்(று) உள்ள எல்லாம்
மந்திர விதியி னால்தான் வழாதுபல் நாளும் செய்தே
அந்தம்இல் அதனால் சித்த சுத்தி உண்டாயிற்று இல்லை 10

இன்னும்ஒன்று உளது கேட்டி இரண்டு மீமாஞ்சை உள்ளும்
துன்னிய கருமம் முற்றும் சொற்றிடும் மீமாஞ்சைக்கே
பன்னுபல் திறத்தினாலும் பரத்துவம் சாதித்தேனால்
உன்னும் மற்று அதனால் நும்முன் உரைத்ததை அடைந்தி லேனே 11

என்செய்வேன் உரைத்தல் செய்யாய் இணர்படு கடுக்கை மென்பூப்
பொன்செய்தார் முடியார்க்(கு) அன்பு பூண்(டு)உயர் சொரூப நிட்டை
முன்செய்மா தவத்தால் பெற்ற முனிவனே என்று வேண்டித்
தன்செயல் உரைத்தர்க்(கு) அங்குத் தமிழ்முனி சாற்றல் உற்றான்12

உரைசெயும் கருமம் எல்லாம் ஒருசிவப் பிரீதி என்றே
தரைஇடைச் செய்தாய் இல்லை சைமினி முனியால் அந்நூல்
புரைதபு சித்த சுத்தி அடைந்திலை புரிந்(து)அவ் வாறு
விரைதரப் புரியார் எந்த ஞான்றினும் மேவார் உண்மை 13

கருமமே கருத்தா ஆகச் சாதிக்கும் கடன்பூண் டாய்க்கு
மருவரும் பிரம ஞானம் வருவ(து)இன்(று) எந்த ஞான்றும்
கருமிகள் பிரம லோகதுரியந்தம் கலந்து வாழ்ந்து
மருவுபுண் ணியம்தீர் போழ்து மண்ணினில்மீட்(டு) உதிப்பார் மாதோ 14

கருமங்கள் அனைத்தும் ஞானாக் கினிஇடைக் கருக லாலே
அருமந்த அகண்ட சச்சி தாநந்த சிவசொ ரூபத்
திருஒன்று நிட்டர் ஆய ஞானிகள் செனியார் கன்மம்
ஒரு அந்தம் உற்றோய் இந்த உண்மைநீ உணர்தி என்றான் 15

செந்தமிழ் முனிவன் மாற்றம் சைமினி செவியின் ஏற்றுப்
பந்தவெந் துயர்தீர் மோக்க பதம்தரும் ஞானம் ஆய
நிந்தைஇல் சிவசொ ரூப நிட்டைஞா னத்தை நாயேன்
உய்ந்திட இரங்கி இன்னே உரைத்திஎன்(று) அடியில் வீழ்ந்தான் 16

தன்னடி பணிந்து வேண்டும் சைமினி முனிவற்(கு) உற்ற
பன்னரி தாய அன்பும் பக்குவத் திறனும் ஓர்ந்தே
உன்னரும் கடல்நீர் முற்றும் உழுந்தள(வு) ஆக்கி உண்டு
முன்னர்வா னவரைக் காத்த முனிவரன் உரைக்கல் உற்றான் 17

வையகம் புகழும் வன்னி வனமதுப் பொய்கைத் தீரத்(து)
ஐயமுன் தவம்பு ரிந்தான் அருள்மதுப் பிரியன் என்பான்
பொய்அகல் அவற்கு முக்கண் பூரணன் அருளி னால்எண்
கையன்இப் பிரம ஞானம் கருத்(து)உற உபதே சித்தான் 18

அயன்உப தேசம் செய்த அத்தகு பிரம ஞானம்
பயன்உற விரித்து வீர பாண்டியற்(கு) உபதே சித்தான்
நயம்மிகும் அவன்யார் எந்த நகரம்வீற்(று) இருப்போன் செய்த
செயல்எவன் என்னில் எல்லாம் தெருட்டுதும் தெளிதி நீயே 19

இருஞ்சமி வனத்தின் தென்பால் இரண்டுயோ சனைதூ ரத்தில்
கருஞ்சுரும்(பு) உளரும் சோலைக் கானப்பேர் எனும்ஊர் ஒன்று
பெருஞ்சுரர் விரும்பிப் போற்றப் பிறங்குவ(து) உயர்ந்த வான் நா(டு)
அருஞ்சுர நா(டு)என்(று) ஓத அமைந்தபல் வளத்த(து) அம்மா 20

காமர்அம்(பு) ஆடல் எங்கும் காமரம் பாடல் எங்கும்
மாமயில் ஆடல் எங்கும் மாமைஇல் ஆள்தல் எங்கும்
சோமன்மஞ்(சு) ஆரும் எங்கும் சோமன் மஞ்(சு) ஆரும் எங்கும்
கோமறு(கு) அணிகள் எங்கும் கோமறுகு அணிகள் எங்கும் 21

ஆடுகந் துகங்கள் எங்கும் ஆடுகந் துகங்கள் எங்கும்
ஓடைசேர் ஆம்பல் எங்கும் ஓடைசேர் ஆம்பல் எங்கும்
நாடரும் பவனம் எங்கும் நாடரும் பவனம் எங்கும்
வாடரும் கொடிகள் எங்கும் வாடரும் கொடிகள் எங்கும் 22

பொங்(கு)ஒலிச் சங்கம் எங்கும் புலவர்தம் சங்கம் எங்கும்
மங்கரும் தியாகம் எங்கும் வளங்கள்நந்(து) யாகம் எங்கும்
பங்கம்இல் யானம் எங்கும் பரமதி யானம் எங்கும்
கொங்(கு)அலர் வாவி எங்கும் குதிக்கும்மீன் வாவி எங்கும் 23

நிலவுவ சந்தம் எங்கும நீடுவ சந்தம் எங்கும்
குலவுவ வள்ளை எங்கும் குளிர்புனல் வள்ளை எங்கும்
உலவுவ தும்பி எங்கும் உறங்குவ தும்பி எங்கும்
கலவுவ சுகமே எங்கும் காமரு சுகமே எங்கும் 24

விருந்(து) உப சரிப்பார் எங்கும் மேதகச் சரிப்பார் எங்கும்
அருந்துவ பிரிப்பார் எங்கும் அடாதவம்பு இரிப்பார் எங்கும்
பொருந்துவ பரிப்பார் எங்கும் புக்கதப்(பு) அரிப்பார் எங்கும்
திருந்திஅ விர்இப்பார் எங்கும் திகழநூல் விரிப்பார் எங்கும் 25

பற்பல வளங்கள் சான்று பரவும்இக் கானப் பேரைக்
கற்பக நாட்டு ளோரும் காளையார் கோவில் என்றும்
பொற்(பு)அமர் தெய்வக் காளி புரம்எனறும் புகலா நிற்பர்
அற்புதம் பயவா நிற்கும் அந்நகர் இனிது வாழ்வோன் 26

ஆதவன் குலத்தை வெய்யோன் குலம்என்றும் அழலி னான்என்றும்
ஓ(து)அவன் குலத்தை வெந்தீக் குலம்என்றும் உரைப்பர் இன்ன
மேதக(வு) அல்ல என்றுவிரும்புதண் மதிக்கு லத்துக்
காதலின் உதித்தான் கற்றோர் இரட்டுபு கரைய மாதோ 27

புலியினை எழுதல் தானும் வில்லினைப் பொறித்தல் தானும்
நலி(வு)அறு குலாதிக்(கு) என்று நட்(பு)இல என்று நக்குப்
பொலிதரு மதிய மாம்தன் குலமுதல் உவகை பூப்ப
மெலி(வு) அறு துவசம் தன்னில் எழுதினன் மீனை மாதோ 28

மழுப்பொலி படையி னானும் சக்கர வலியி னானும்
விழுப்பம்என்(று) அணியார் போன்று மாலியம் விழைவ(து)
என்என்(று)
எழுப்பயில் தோளி னாளும் சிவலிங்கம் இலங்கக் காய்த்துப்
பழுத்தவிர் வேம்பின் ஒண்பூ மாலையேபரப்பி வாழ்வான் 29

குலமுதல் ஒருவன் தானேகொடுங்கதிர் வெப்பம் கூடா
நலம்உறக் கலித்த(து) என்னப் பொலியும்நற் குடையான் அன்னான்
நிலவுவெண் கதிரின் கற்றை நிறைஇரு கூறாய் நீங்கா(து)
உலவுதல் பொருவப் பாங்கர் ஒளிசெயும் கவரி யானே 30

இறையனார் தலைவ ராக இருந்திலர் என்னில் சங்கத்
துறையனார் தத்த மக்(கு) ஆங்கு உற்றவா சங்கை தீர்க்கும்
நிறையருள் கல்வி சான்ற நிகர்இலான் இவனே என்று
கறைஅறக் கருதின் அன்னான் கல்விஒர் அளவிற்(று) ஆமோ 31

கொடையினால் களிற்றால் மாவால் கொடிஞ்சிஅம் தேரால் காலாள்
படையினால் பகைவர் அஞ்சப் படுபெரு விறலான் மிக்க
முடையினால் பொலிவேல் ஆதி முருக்குமே திகளால் நல்ல
நடையினால் பிறவும் உள்ள நலத்தினால் தனக்குஒப்(பு) இல்லான்32

வளர்ஒளி மகுடம் வாகு வலயம்ஒண் குழைம தாணி
கிளர்தரு கடகம்ஆழி கெழுமுபொன் அரைஞாண் மற்றைத்
தளர்(வு)இல்பன் மணிப்பூண் நாலும் தரைபயில் கதிரோன்
அன்னான்
பளகறு புகழ்சால் வீர பாண்டியன் என்னும் பேரான் 33

வெள்ளிய நீறும் அக்க மாலையும் விரவப் பூண்டு
வள்ளிய எழுத்(து)ஐந்(து) எண்ணும் மனத்தினான் வான நாடர்
உள்ளிய புகழ்க்கா ளீசர் தமையும்மா சித்து மேன்மேல்
துள்ளிய பகைவர் சென்னி துணிக்கும் ஓர் வடிவாள் பெற்றான் 34

அறம்தலை எடுக்கத் தோன்றும் அனையவன் அனைய வாளால்
பறந்தலை ஏற்ற மாற்றார் படையொடும் மடியச் சாடி
உறந்(து)அலை குருதி பொங்க வெற்றிகொண்(டு) உற்றான் அற்றான்
நிறந்தலை அரைவாள் கொற்ற வாள்என நிலவிற்(று) அன்றே 35

செற்றவாள் மருவ லார்தம் சென்னியைத் தடிந்து செந்நீர்
முற்றவாய் மடுத்து மென்று முழுவிடக்(கு) ஈறால் தின்று
முற்றவெம் பசிதீ ராமல் உணர்ந்(து)இரு கடைவாய் நக்கும்
கொற்றவாள் கைவி டானாய்க் குவலயம் புரக்கும் நாளில் 36

வரிகழல் கறங்க யாத்து வட்(டு)உடை உடுத்து மெய்யில்
புரிதரு கவயம் பூண்டு பொலிதலைச் சாத்துச் சேர்த்துத்
திரிதரும் உடும்பின் தோலால் செய்தகைக் கட்டி கட்டி
வரிபயில் காட்டு வேட்டம் ஆடுவான் குறித்(து)எ முந்தான் 37

வில்லொடு கணையும் கொற்ற வாளும்கை விடாது தாங்கிக்
கல்லொடு பொருதும் திண்தோள் காளைஆங்(கு) எழுந்த(து) ஓர்ந்து
புல்லொடும் மறுகி னோடும் பொருவடுப் பொலிந்த யாக்கை
மல்லொடு பொலியமள்ளார் எண்இலர் மருங்கு சூழ்ந்தார் 38

புனைகருந் தொடர்ப்பூட்(டு) உண்ட கழுத்தின் போகு கால
பனைமடல் கருக்கு நேரும் வாயின் படிந்த நாவ
நினைதொறும் எவரும் அஞ்சும் வலியநீள் சுருண்ட வால
அனையபல் ஞமலி ஒன்றோ(டு) ஒன்(று)உறா(து) அடர்ந்து சூழ 39

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

27.11.2014 காரைக்குடி திருநாவுக்கரசு சுவாமி குருபூஜை நடைபெற்றது. 8.12.2014 ராயவரம் வள்ளியப்ப ஐயா குருபூஜை நடைபெற்றது.

6.12.2014 அன்று கோவிலூர் ஆண்டவர் கல்வி நிறுவனங்கள் சார்பாகச் சட்ட விழிப்புணர்வு நிகழ்ச்சி சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் நடைபெற்றது. மடாலயத்தின் வளர்ச்சியில் முக்கிய இடம் வகித்து வழிகாட்டுகின்ற வழக்கறிஞர் திரு. ஏ.ஆர். பழனியப்பன் மற்றும் அவரது குழுவினர் பங்கேற்றனர். பள்ளி, கல்லூரி மாணவர்கள் மற்றும் ஆசிரியர்கள் கேட்ட வினாக்களுக்கு விளக்கம் அளித்தனர்.

11.12.2014 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் உலகத் தமிழ் எழுத்தாளர் சங்கம் சிவகங்கை மாவட்டக் கிளையின் சார்பில் கட்டுரை, கவிதை, சிறுகதை எழுதுதல் போட்டிகள் நடைபெற்றன. டாக்டர் அய்க்கண், செயலர் பாலநடராஜன், காப்பியக் கவிஞர் நா. மீனவன் ஆகியோர் போட்டிகளை நடத்திக் கொடுத்தனர். போட்டிகளைக் கல்லூரி முதல்வர் டாக்டர் சே. குமரப்பன் தொடங்கி வைத்தார். போட்டிகளில் பங்கேற்ற மாணவர்களுக்குத் திருக்குறள் மற்றும் பாரதியார் கவிதைகள் அன்பளிப்பாக வழங்கப்பெற்றன. பிற்பகல் 2.30 மணியளவில் கல்லூரி கருத்தரங்க அறையில் பாரதி விழா நடைபெற்றது. அதனையொட்டிச் சிறப்புப் பட்டிமன்றம் நடைபெற்றது. டாக்டர் சே. குமரப்பன் தலைமை உரையும், வரவேற்புரையும் நிகழ்த்தினார். திரு. பாலநடராஜன் பாரதி விழா வாழ்த்துப் பாடல் பாடினார். காப்பியக் கவிஞர் மீனவன் வாழ்த்துரை வழங்கினார். டாக்டர் அய்க்கண் பட்டிமன்ற நடுவராகச் சிறப்புச் செய்தார். பாரதி கண்ட பெண் விடுதலை கிடைத்துவிட்டதா ? கிடைக்கவில்லையா ? என்னும் தலைப்பில் மாணவியர் பங்கேற்றனர். கிடைத்து விட்டது என்னும் தலைப்பில் மு. இலக்கியா, ஜெகதீஸ்வரி, பிரியங்கா ஆகியோரும் கிடைக்கவில்லை என்னும் தலைப்பில் ராம. நவலெட்சுமி, மா. மணிமேகலை, சக்திபிரியா ஆகியோரும் பேசினர். பேராசிரியர் மெய்யாண்டவர் நன்றி கூறினார். மாணவி ஹேமலதா நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94434 42361

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

**B.A., English**
**B.Sc., Computer Science**
**B.Com.,**
**B.Com. (C.A).,**
**B.B.A.,**
**B.Sc., Maths**
**B.Sc., Visual Communication**

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,**

**ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,**

**இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்**

**போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரியவாய்ப்பு !!**

## B.Sc. Visual Communication.,

(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாக தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

விண்ணப்பங்கள் கிடைக்குமிடம் : நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் பள்ளி
கோவிலூர்